## இலக்கணமும் மொழித்திறனும்

### 1. பிழையின்றித் தமிழ் எழுதுவோம்.

சாலையில் நாம் பார்க்கும் பிழைகள்.

திருத்தி எழுதுக

**i. ஒற்றுப்பிழைகள்**

அ. கடமையை செய்; பலனை கேள்.

ஆ. மர சாமான்கள் வாடகைக்கு கிடைக்கும்.

இ. திரைபடம் காண வருக.

**ii. குறில் நெடில் பிழைகள்**

அ. சாப்பாடு தாயார்.

ஆ. பள்ளிக்குடம் அருகில் உள்ளது.

இ. ஒன்று வங்கினால் ஒன்று இலவாசம்.

**iii. துணையெழுத்துப் பிழைகள்( ெ, ே, ை )**

அ. மருத்துவமன பாகும் வாழி

ஆ. இங்கு பட்டு சால்லித் தரப்பாடும்

இ. காவலன் நாகர்

**iv. மயங்கொலிப் பிழை**

அ. இருசக்கர வாகனம் பலுது பார்க்கப்படும்

ஆ. தினசரி பகள் காட்சி உண்டு

இ. வறந்தரு விநாயகர் கோயில்

### 2. எண்களை எழுத்தால் எழுதிப் பழகுக.

17 ..........................................................................

20 ..........................................................................

32 ..........................................................................

48 ..........................................................................

51 ..........................................................................

### 3. உம் எதற்கு ?

இராமன் சீதை இலக்குவன் காடு சென்றனர் என்பதை,
இராமனும் சீதையும் இலக்குவனும் காடு சென்றனர் என்றுதான் எழுதுவோம்.

ஒன்றுக்கு மேற்பட்ட மனிதர்கள், பறவைகள், விலங்குகள், பொருள்கள் சேர்ந்து வரும்போது 'உம்' சேர்த்து எழுதுகிறோம்.

பயிற்சி (உம் சேர்த்து எழுதுக)

1. விலங்குப் பூங்காவில் சிங்கம் புலி கரடி இருந்தன.
2. சுக்கு மிளகு திப்பிலி நல்ல மருந்துப் பொருள்கள்.
3. வீடு பள்ளிக்கூடம் பக்கத்தில் இருக்கின்றன.

## வகுப்பறைத் திறன்கள்

### 1. பேசுக

அ. ஈ.வெ.ரா. என்பதன் விரிவு என்ன ?

ஆ. பகுத்தறிவாளர் சங்கத்தைப் பெரியார் அமைத்ததன் நோக்கம் என்ன ?

இ. தங்கமாம்பழம் கொடுத்த அரசர் சுயசிந்தனை உடையவரா ?பிறர்சொல் கேட்பவரா ?

ஈ. தெனாலிராமன் கதைகளைப் படிக்க உங்களுக்கு விருப்பம் இருக்கிறதா ?

### 2. வினா எழுப்புக

பின்வரும் தலைப்புகள் தொடர்பாக உனக்குத் தோன்றும் வினாக்களைக் கேள்.

– வீரம் – ஏற்றத்தாழ்வு – மூடநம்பிக்கை

(எ.கா) எது வீரம் ?

### 3. விவாதிக்க

அ. தெனாலிராமன் தங்க மாம்பழம் வாங்கியவர்களுக்குச் சூடுபோட்டது சரியா ? தவறா ?

ஆ. இராமசாமிக்குப் 'பெரியார்' என்று தாய்மார்கள் பட்டம் கொடுத்துப் பாராட்டியது ஏன் ?

### 4. எழுதுக

#### 1. ஓரிரு சொற்களில் விடை தருக.

அ. கடம் என்னும் சொல்லின் பொருள் என்ன ?

ஆ. பெரியார் தோற்றுவித்த இயக்கம் எது ?

இ. அப்துல்ரகுமான் கவிதையில் தோட்டக்காரனிடம் பேசுவது எது ?

ஈ. கேரளத்தில் நடந்த போராட்டத்தில் பெரியாருக்குக் கிடைத்த சிறப்புப் பட்டம் என்ன ?

#### 2. ஓரிரு தொடர்களில் விடை தருக.

அ. கல்லெறிந்து துன்புறுத்தக் கூடாதது எது ?
கையில் எடுத்து விளையாடக் கூடாதது எது ?

ஆ. கிளைகளை வெட்டும் தோட்டக்காரனிடம் மரம் சொல்வது என்ன ?

இ எவற்றைத் தம்மிரு கண்களாகப் பெரியார் கருதுகிறார் ?

#### 3. நான்கு வரிகளுக்கு மிகாமல் விடை தருக.

அ. கடுவெளிச்சித்தர் கூறும் அறிவுரைகளில் சிறப்பான மூன்றைக் கூறுக.

ஆ. பெரியாரும் பெண் விடுதலையும்

### படைப்புத் திறன்

தெனாலிராமன் கதையை வகுப்பில் நாடகமாக நடித்துக் காட்டுக.

## வாழ்க்கைத் திறன்கள்

### 1. ஏற்றுக் கொண்டாரா ? மறுத்தாரா ?

(வாய்மொழியாக விடை தருக)

அ. எல்லாம் தலைவிதி என்று சொன்னதைப் பெரியார் ஏற்றுக் கொண்டாரா ? மறுத்தாரா ?

ஆ. மேல்சாதி, கீழ்ச்சாதி என்று பிரித்ததைப் பெரியார் ஏற்றுக்கொண்டாரா ? மறுத்தாரா ?

இ. தீண்டாமை என்ற நெடுங்காலப் பழக்கத்தைப் பெரியார் ஏற்றுக் கொண்டாரா ? மறுத்தாரா ?

ஈ. ஆண்கள் அதிகாரம் செய்வதையும் பெண்கள் அடங்கிக் கிடப்பதையும் பெரியார் ஏற்றுக்கொண்டாரா ? மறுத்தாரா ?

எல்லாக் கேள்விகளுக்கும் விடை 'மறுத்தார்' என்பதுதானே ! அப்படியானால், பெரியாரிடமிருந்து நாம் கற்றுக்கொண்ட திறன் **மறுத்தல் திறன்** (Refusal Skill) ஆகும்.

**குறிப்பு**

- மறுத்தல் என்பது அகம்பாவம் இல்லை.
- மறுத்தல் என்பது பணியாமை அன்று.
- தவறான கருத்துக்களை மறுத்தால்தான் நாம் வளர முடியும்.
- துணிச்சலின் அடையாளம் தவறானவற்றை மறுப்பது.
- மூடநம்பிக்கைகளை மறுப்பது முன்னேற்றம்.
- மறுப்பது – பெண்ணுக்குப் பாதுகாப்பு.
- மறுத்தல் அரை குறையாக இருந்து பயன் இல்லை; உறுதியாக இருக்கவேண்டும்.

**பயிற்சி**

### 2. எது உறுதியான மறுப்பு ?

**மாணவர்களுக்கு**

I. சூழ்நிலை : சக மாணவர் சிலர் சேர்ந்து உனக்குப் பிடிக்காத பழக்கம் ஒன்றைச் செய்ய அழைக்கிறார்கள். உனக்கு அப்பழக்கம் கிடையாது. எப்படி மறுப்பாய் ?

மறுப்பு

அ. அப்பாவுக்குத் தெரிந்தால் திட்டுவார்.

ஆ. எனக்குப் பயமாக இருக்கிறது.

இ. முடியாது ! இது எனக்குப் பிடிக்காது.

ii. சூழ்நிலை : உன் நண்பன் ஒருவன் வேறு சாதிக்காரன். அவனோடு சேரக்கூடாது என்கிறார் உன் அப்பா. அவர் எண்ணத்தை எப்படி மறுப்பாய் ?

மறுப்பு அ. நண்பர்களிடம் நான் சாதி பார்க்கமாட்டேன்.

ஆ. நான் சேரவில்லை. அவன்தான் வந்து என்னுடன் சேர்கிறான்.

இ. தேர்வு வரையில் சேர்ந்து இருப்போம் அப்பா ! அப்புறம், அவனைச் சேர்க்க மாட்டேன் !

iii. சூழ்நிலை : பக்கத்துத் தெரு நண்பன் உங்கள் தெருவுக்கு வந்து விளையாடுகிறான். அவனை விளையாட்டில் சேர்க்கக்கூடாது என்கிறார்கள் உன் தெரு நண்பர்கள். அதனை எப்படி மறுப்பாய் ?

மறுப்பு அ. பாவம், அவன் அப்பாவி !

ஆ. இன்று ஒரு நாள் மட்டும் இருந்துவிட்டுப் போகட்டும்.

இ. அவனும் என்னுடைய நண்பன். அவனோடு சேர்ந்துதான் விளையாடுவேன்.

**விடைகள்:**

இலக்கணமும் மொழித்திறனும்

2. எண்களை எழுத்தால் எழுதிப் பழகுக.

பதினேழு

இருபது

முப்பத்திரண்டு

நாற்பத்தெட்டு

ஐம்பத்தொன்று

# புறநானூறு *

நாடாகு ஒன்றோ; காடாகு ஒன்றோ ;
அவலாகு ஒன்றோ; மிசையாகு ஒன்றோ ;
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை ; வாழிய நிலனே !

– ஔவையார்

## பொருள்:

நிலமே! நீ நாடாக இருந்தால் என்ன ? காடாக இருந்தால் என்ன ? பள்ளமாக இருந்தால் என்ன ? மேடாக இருந்தால் என்ன ? எங்கே ஆண்கள் நல்லவர்களாக இருக்கிறார்களோ அங்கு நீயும் நல்லதாக இருக்கிறாய், நிலமே! நீ வாழ்க!

## சொற்பொருள்:

ஒன்றோ – தொடரும் சொல். நாடாகு ஒன்றோ – நாடாக இருந்தால் என்ன அல்லது . . . எனத் தொடரும். அவல் – பள்ளம்; மிசை – மேடு; நல்லை – நன்றாக இருப்பாய்; ஆடவர்–ஆண்கள். இங்கு மனிதர்களைப் பொதுவாகக் குறித்தது.

## நூல் குறிப்பு:

புறநானூறு = புறம்+நான்கு+நூறு. எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று புறநானூறு. இந்நூல் புலவர் பலர் இயற்றிய பாடல்களின் தொகுப்பு. எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் சங்க நூல்களாம். சங்க இலக்கியம் ஈராயிரம் ஆண்டுகள் பழைமை உடையது. தமிழர்களின் வரலாறு, பண்பாடு ஆகியவற்றை அறிய உதவும் நூலாகப் புறநானூறு திகழ்கிறது.

## ஆசிரியர் குறிப்பு:

ஔவையார் சங்கப் புலவர்; அதியமானின் நண்பர். அரிய நெல்லிக்கனியை அதியமானிடம் பெற்றவர். சங்க காலத்தில் பெண் கவிஞர் பலர் இருந்தனர். அவர்களுள் மிகுதியான பாடல்கள் பாடியவர் ஔவையார். சங்கப்பாடல் பாடிய ஔவையாரும், ஆத்திசூடி பாடிய ஔவையாரும் ஒருவர் அல்லர்; வேறு வேறானவர்.

# திண்ணையை இடித்துத் தெருவாக்கு !

உட்கார் நண்பா, நலந்தானா ?– நீ
ஒதுங்கி வாழ்வது சரிதானா ?
சுட்டு விரல் நீ சுருங்குவதா ?– உன்
சுயபலம் உனக்குள் ஒடுங்குவதா ?

'புல்லாய்ப் பிறந்தேன் நானென்று' – நீ
புலம்ப வேண்டாம்; நெல்கூட
புல்லின் இனத்தைச் சேர்ந்ததுதான் – அது
பூமியின் பசியைப் போக்கவில்லை ?

'கடலில் நான்ஒரு துளி'யென்று – நீ
கரைந்து போவதில் பயனென்ன ?
'கடலில் நான்ஒரு முத்தெ'ன்று – நீ
காட்டு; உந்தன் தலைதூக்கு !

வந்தது யாருக்கும் தெரியாது – நீ
வாழ்ந்ததை உலகம் அறியாது;
சந்ததி கூட மறந்துவிடும் – உன்
சரித்திரம் யாருக்கு நினைவுவரும் ?

திண்ணை தானா உன்தேசம் ?– உன்
தெருவொன் றேயா உன்னுலகம்,
திண்ணையை இடித்துத் தெருவாக்கு – உன்
தெருவை மேலும் விரிவாக்கு

எத்தனை உயரம் இமயமலை ! – அதில்
இன்னொரு சிகரம் உனதுதலை !
எத்தனை ஞானியர் பிறந்த தரை – நீ
இவர்களை விஞ்சிட என்னதடை ?

பூமிப் பந்து என்னவிலை ? – உன்
புகழைத் தந்து வாங்கும்விலை !
நாமிப் பொழுதே புறப்படுவோம் – வா
நல்லதை எண்ணிச் செயல்படுவோம் !

– தாராபாரதி



ஆசிரியர் குறிப்பு:

கவிஞர் தாராபாரதி எழுச்சிமிக்க கவிதைகள் எழுதுவதில் வல்லவர். ஆசிரியராகப் பணியாற்றிய இவர் தமிழக அரசின் நல்லாசிரியர் விருது பெற்றவர். புதிய விடியல்கள், இது எங்கள் கிழக்கு, தாராபாரதி கவிதைகள் முதலியன இவர்தம் நூல்களுள் சில. இவர் வாழ்ந்த காலம் 26.2.1947 முதல் 13.5.2000வரை.

# தேசியம் காத்த செம்மல்

பாரத நாடு பழம்பெரும் நாடு. இந்நாடு அந்நியர் ஆட்சிக்கு அடிமைப்பட்டது. அடிமைத்தளை நீங்கக் கண்ணீரும் செந்நீரும் சிந்தியோர் பலர். தமிழகத்தில் சுப்பிரமணிய சிவா, வ.வே.சு. ஐயர், கப்பலோட்டிய தமிழன் வ.உ.சி., வாஞ்சிநாதன், திருப்பூர்குமரன் முதலியோர் பாடுபட்டனர். இவர்களுள் ஒருவர் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர்.

## பிறப்பும் வளர்ப்பும்

இராமநாதபுரம் மாவட்டத்தில் பசும்பொன் என்னும் ஊரில் 1908ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 30ஆம் நாள் பிறந்தவர் முத்துராமலிங்கத் தேவர். இவருடைய தந்தையார் திரு. உக்கிரபாண்டித் தேவர், தாயார் திருமதி இந்திராணி அம்மையார். இவர் அன்னையை இளம் வயதில் இழந்தார். தாயொடு அறுசுவை உண்டி போயிற்று. எனினும் முத்துராமலிங்கத் தேவருக்கு இசுலாமியப் பெண்மணி ஒருவர் தாயாகிப் பாலூட்டி வளர்த்தார். பாட்டியாரின் அன்பணைப்பில் இவர் வளர்ந்தார். பாட்டியின் வீட்டில் வளர்ந்த நாள்களில் இவருக்குக் கற்பித்த ஆசிரியர் குறைவற வாசித்தான் பிள்ளை ஆவார்.



## பள்ளிக் கல்வி

முத்துராமலிங்கத் தேவர் தம் தொடக்கக் கல்வியைக் கமுதியிலுள்ள தொடக்கப்பள்ளியில் கிறித்துவப் பாதிரியார்களிடம் பெற்றார். பசுமலை உயர்நிலைப்பள்ளியில் சில ஆண்டுகள் பயின்றார். பின்னர், ஐக்கியக் கிறித்துவப்பள்ளியில் படித்தார். இராமநாதபுரம் அரசு உயர்நிலைப்பள்ளியில் பத்தாம் வகுப்புப் படித்தார். இராமநாதபுரத்தில் படித்துக் கொண்டிருக்கும்போது அந்நகரில் பிளேக் நோய் பரவியது. இவருடைய கல்வியும் நின்றது.

## பல்துறை அறிவு

பள்ளிப்படிப்பு நின்றாலும் கேள்வியறிவையும் பட்டறிவையும் மிகுதியாகப் பெற்றார் இவர். தமிழ், ஆங்கிலம் ஆகிய இருமொழிகளிலும் வல்லமை பெற்றார். அம்மொழிகளில் சொற்பொழிவாற்றும் திறன் பெற்றார். சிலம்பம், குதிரை ஏற்றம், துப்பாக்கிச் சுடுதல், சோதிடம், மருத்துவம் ஆகியனவற்றைக் கற்றறிந்தார். இளமையிலேயே அரசியலில் ஆர்வங்கொண்டார்.

### பொதுத்தொண்டில் நாட்டம்

முத்துராமலிங்கத் தேவர், இளமை முதற்கொண்டே பொதுத்தொண்டில் ஈடுபாடு காட்டினார். 32சிற்றூர்களில் தமக்குச் சொந்தமாக இருந்த நிலங்களை உழுபவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தார். அவற்றைத் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு அளித்து மகிழ்ந்தார். இவர்நிலக்கிழார் ஒழிப்பிலும், ஆலய நுழைவுப் போராட்டத்திலும் முன்னின்ற வீரர் ஆவார். சமபந்தி முறைக்கும் ஊக்கமளித்த பெருமகனாவார். இவர் காலத்தில் ஆங்கில அரசு, மக்களுள் சிலரைக் குற்றப்பரம்பரை என ஒதுக்கி வைத்திருந்தது. அவ்வினத்தின் துயர் களைய அரும்பாடுபட்டார். அவர்களுடைய வாழ்க்கை உயர்வுக்காகப் போராடினார். அதனால், குற்றப்பரம்பரைச் சட்டத்திலிருந்து அவர்களை விடுதலைபெறச் செய்தார். தாழ்த்தப்பட்டவர்க்கென இவர் பல தொண்டுகளைச் செய்துள்ளார். இவர், "சாதியையும் நிறத்தையும் பார்த்து மனிதனை மனிதன் தாழ்வுபடுத்துவது பெருங்கொடுமை; ஆண்டவன் மனித குலத்தைத்தான் படைத்தானே தவிரச் சாதியையும் நிறத்தையும் அல்ல; சாதியும் நிறமும் அரசியலுக்குமில்லை;ஆன்மிகத்திற்கும் இல்லை" எனச் சாதியைப்பற்றிக் கூறியுள்ளார்.

### நாட்டுப் பற்று

முத்துராமலிங்கத் தேவரின் இளமைப்பருவத்தில் இந்தியா ஆங்கிலேயர் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. இவர், தம் நாடு விடுதலை பெறவேண்டுமெனத் தணியா வேட்கை கொண்டிருந்தார். வங்கச் சிங்கமான நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் அவர்களைத் தம் அரசியல் வழிகாட்டியாகக் கொண்டார்; தமிழகத்தின் சிங்கமானார். இவருடைய பேச்சிலும் மூச்சிலும் விடுதலை உணர்வே மிளிர்ந்தது. விடுதலைப்போர் கடுமையாக இருந்த நாள்களில் ஆங்கில அரசு, வட இந்தியாவில் திலகருக்கும் தென்னிந்தியாவில் முத்துராமலிங்கத் தேவருக்கும் வாய்ப்பூட்டுச் சட்டம் போட்டது. மக்களிடையே விடுதலை வேட்கையினை ஊட்டியவர் இவர். 'தேசியம் காத்த செம்மல்' என்று திரு.வி.க. அவர்கள் இவரைப் பாராட்டியுள்ளார்.

இவர் பங்குபெற்ற விடுதலைப் போராட்டங்கள் பல. "தண்ணீர்விட்டோ வளர்த்தோம், கண்ணீரால் காத்தோம்" என்பது பாரதி வாக்கு. இதனை மெய்ப்பிக்குமாறு, இவர் பல இன்னல்களை ஏற்று விடுதலைக்கு உழைத்தார். தாம் ஈடுபடும் விடுதலைப் போராட்டப் பணிகளுக்கு இல்லறவாழ்வு இடையூறாகுமெனக் கருதினார். எனவே, திருமண வாழ்வினைத் தவிர்த்தார்.

### அரசியல் வாழ்க்கை

தம் அரசியல் வாழ்க்கையிலும் முத்துராமலிங்கத் தேவர் மேன்மை பெற்றிருந்தார். தேர்தலில் போட்டியிட்ட ஐந்து முறைகளிலும் வெற்றிவாகையினையே சூடினார். 1937, 1946, 1952,1957,1962 ஆகிய ஆண்டுகளில் நடைபெற்ற தேர்தல்களின் முடிவுகள் இவர் பெற்றிருந்த மக்கட் செல்வாக்கைக் காட்டின. தொண்டு செய்வதற்கே இவர் தம் தொகுதிக்குச் சென்றுள்ளார்; தேர்தல் விளம்பரத்திற்குச் சென்றாரிலர்.

### பலரும் போற்றும் பண்பாளர்

தெய்வீகம், தேசியம் ஆகிய இரண்டையும் இரு கண்களாகப் போற்றியவர் பசும்பொன்னார். இவர் வீரமில்லாத வாழ்வும் விவேகமில்லாத வீரமும் வீணாகுமென எடுத்துரைத்தவர் . இவர் சமயச் சான்றோராகவும் கருதப்பட்டார். வேதாந்த பாஸ்கர், பிரணவ கேசரி, சன்மார்க்க சண்டமாருதம், இந்து புத்த சமய மேதை எனப் பலவாறாகப் பாராட்டப்பெற்றவர். இவர் அனைத்து மதத்தினரிடத்திலும் அன்பும் பரிவும் காட்டினார்.

விவேகானந்தரின் தூதராக, நேதாஜியின் தளபதியாக, சத்திய சீலராக, முருக பக்தராக, ஆன்மிகப் புத்திரராக, தமிழ்பாடும் சித்தராக, தென்பாண்டிச் சீமையின் முடிசூடா மன்னராக, நீதி வழுவா நேர்மையாளராக, புலமையில் கபிலராக, வலிமையில் கரிகாலனாக, கொடையில் கர்ணனாக, பக்தியில் பரமஹம்சராக, இந்தியத் தாயின் நன்மகனாக வாழ்ந்தவர் முத்துராமலிங்கத் தேவர்.

சமயம், சமுதாயம் பற்றிய இவருடைய சிந்தனைகள் மனிதகுலத்திற்கு வழிகாட்டுவனவாகும். இறப்பு என்பது எவ்வகையிலும் வரலாம். இதனையே இவர், "பனை மரத்திலிருந்து விழுந்து பிழைத்தவனும் உண்டு. வயல் வரப்பில் வழுக்கி விழுந்து இறந்தவனும் உண்டு" என்று கூறியுள்ளார். மனிதனின் மனநிலையை இருள், மருள், தெருள், அருள் எனக் குறிப்பிடுகிறார்.

### மறைவு

55 ஆண்டுகள் வாழ்ந்து மக்கள் முன்னேற்றத்திற்காகப் பாடுபட்ட இப் பெருமகனார் 1963 ஆம் ஆண்டு அக்டோபர் 30 ஆம் நாளில் இயற்கை எய்தினார். தாம் பிறந்த நாளை அனைவர் நினைவிலும் நிற்கும் நாளாக்கினார்.

### நினைவுச்சின்னம்

தமிழ்நாடு அரசு இப்பெருமகனாரைப் போற்றும் வகையில் சென்னை மாநகரில் இவருடைய உருவச் சிலையினை நிறுவியுள்ளது. அச்சிலை நிறுவப்பட்டுள்ள சாலைக்கு இவர் பெயர் சூட்டப்பட்டுள்ளது.

பசும்பொன் முத்துராமலிங்கத்தேவரின் வாழ்க்கை வரலாறு, நாட்டுப்பற்றினையும் மத நல்லிணக்கத்தினையும் மனித நேயத்தினையும் உணர்த்துவதாய் விளங்குகிறது.

### சிறப்புக் குறிப்புகள்




முத்துராமலிங்கத் தேவரின் விருப்பத்திற்கிணங்க 6.9.1939இல் மதுரைக்கு நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் வருகை தந்தார்.

நடுவண் அரசு 1995இல் முத்துராமலிங்கத் தேவருடைய அஞ்சல்தலையை வெளியிட்டுச் சிறப்பித்தது.

முத்துராமலிங்கத் தேவர் தம் சொத்துக்கள் முழுவதையும் 17 பாகங்களாகப் பிரித்து, ஒரு பாகத்தை மட்டும் தனக்கு வைத்துக்கொண்டு மீதி 16 பாகங்களையும் 16 பேர்களுக்கு இனாம் சாசனமாக எழுதி வைத்தார்.

# எது பெரிய உண்மை ?

அது ஒரு கிராமம்; ஒரு காலத்தில் செழிப்பாக இருந்தது. இன்று, நிலைமை மாறிப்போய்க் கிடக்கிறது; பஞ்சத்தில் வறண்டுகிடக்கிறது. அந்தக் கிராமத்தின் கோடியில் ஒரு பழுதடைந்த குடிசை. யாரோ வசித்து விட்டுப்போன குடிசை. இப்போது அந்தக் குடிசை, இருவருக்கு அடைக்கலம் தந்துள்ளது. அவ்விருவரில் ஒருவர் பார்வை அற்றவர்; மற்றவர் கால் இழந்தவர். அவர்களுக்கென்று பிழைக்க வழி எதுவுமில்லை. மாலையில் கடைத்தெரு மூடும்போது அவர்கள் செல்வார்கள். மிஞ்சிய காய், கனி, உணவுப் பொருள்களை மக்கள் அவர்களுக்குத் தருவார்கள். அதை உணவாக்கி அவர்கள் உண்டு வாழ்ந்தனர்.



ஆனால், பஞ்சம் வந்தபிறகு, கடைத்தெரு பெரும்பாலும் அடைத்தே கிடக்கிறது. எப்போதாவது திறந்திருந்தாலும் இந்த இருவருக்கும் எதுவும் கிடைப்பதில்லை. எனவே, இருவரும் பெரும்பாலும் பட்டினி கிடந்தனர். தொடர்ந்து ஐந்து நாள்கள் எதுவும் கிடைக்காமல் பட்டினியில் இருந்தபோது, ஒரு முடிவுக்கு வந்தனர். உயிரைக் காப்பாற்றிக்கொள்ள எதையும் செய்யத் துணிந்தனர்.

கண் தெரியாதவரால் எவ்வளவு தூரம் தட்டுத்தடுமாறிப் போக முடியும்? கால் இழந்தவரால் ஊர்ந்து எவ்வளவு தூரம்வரை போக முடியும்? பக்கத்திலிருந்த வயல்கள் எல்லாம் வறண்டு கிடந்தன.

தூரத்தில் இருந்தது ஊர்த்தலைவரின் தோட்டம். அவருக்கென்று தனிப்பட்ட தண்ணீர் வசதிகள்! தோட்டம் பஞ்சத்திலும் செழித்திருந்தது.

அங்கே செல்வதென்று முடிவு செய்தார்கள். கால் இழந்தவரைக் கண் இழந்தவர் சுமந்து செல்லவேண்டும். கால் இழந்தவர் வழிகாட்டக் கண் இழந்தவர் நடக்க வேண்டும். இது அவர்களின் ஏற்பாடு.

வழிகாட்டுவது எளியது; ஆனால் அதன்படி நடப்பது கடினம். கண் இழந்தவர் மூச்சு வாங்க நடந்தார். எப்படியோ ஊர்த்தலைவர் தோட்டத்துக்கு வந்துவிட்டார்கள். ஊருக்குள் யாரும் நெருங்கப் பயப்படும் தோட்டம் அது ; பிடிபட்டால் அடி உதை உறுதி!

தோட்டத்தில் பழங்களும், காய்கறிகளும் குவிந்து கிடந்தன. கால் இழந்தவரை வரப்பிலேயே இறக்கிவிட்டு, கண் இழந்தவர் தட்டுத் தடுமாறிப் போய்க் கைக்கு அகப்பட்டதை எடுத்து வந்தார். பார்வையற்றவர் காலிழந்தவரைச் சுமந்துகொண்டு குடிசைக்குத் திரும்பினர்; எடுத்து வந்தது இரண்டு மூன்று நாள்களுக்குப் போதுமானது.

நெடுநாளைக்குப் பிறகு, அன்றுதான் அவர்கள் வயிறார உண்டு உறங்கினார்கள். காலையில் எழும்போதே பெருங்கூச்சல் கேட்டது.

ஊர் முச்சந்தியில் நின்று, தலைவர் கத்திக்கொண்டு இருந்தார், "யாரடா, என் தோட்டத்தில் இறங்கித் திருடினவன் ?"

ஊர் கைகட்டிப் பயந்து நடுங்கியது. என்ன நடக்குமோ ?யாரும் திருட்டை ஒப்புக்கொள்ள முன்வராததால், ஊர்த் தலைவர், 'நீதி தேவதை'யின் கோயிலுக்குப் போய் மண்டியிட்டு வேண்டி, 'நீதி தேவதை'யை ஊருக்குள் அழைத்து வந்தார்.

ஒவ்வொருவரும் 'நீதி தேவதை'யின்முன் வந்து உண்மையைச் சொல்லவேண்டும். திருடியவரைத் தேவதை கண்டுபிடித்துவிடும்; பொய் சொன்னாலும் கண்டுபிடித்துவிடும்; தவறு செய்தவரின் கழுத்தை நெரித்துக் கொன்றுவிடும்.

ஊர் மக்கள் ஒவ்வொருவராக வந்து தான் திருடவில்லை என்று வாக்குமூலம் அளித்தனர். யாரையும் 'நீதி தேவதை' கொல்லவில்லை.

இனியிருப்பது பார்வையற்றவரும் கால் இழந்தவரும் மட்டும்தான். முதலில் யாருக்கும் அவர்களின் நினைவு வரவில்லை; சட்டென்று நினைவு வர, ஊர்த் தலைவர் கத்தினார்:

"அந்த ரெண்டு பயல்களையும் இழுத்துட்டு வாங்கடா!"

இருவரும் தட்டுத்தடுமாறி வந்தார்கள். ஊர் மக்களுக்குக் கண் கலங்கியது. நீதி தேவதையின்முன், முதலில் கண் இழந்தவர் நின்று சொன்னார்: 'தேவதையே! நான் பிறவிக் குருடன்; எதையும் கண்கொண்டு பார்க்க முடியாதவன். தலைவர் தோட்டத்தையும் நான் பார்த்ததில்லை" என்றார். தேவதை அவரை எதுவும் செய்யவில்லை.

அடுத்துக் கால் இழந்தவர் வந்து நின்றார். "அம்மா! நான் பிறவியிலேயே முடவன்; நடக்க மாட்டாதவன்; தலைவர் தோட்டத்தில் என் கால் படவேயில்லை" என்றார். கால் இழந்தவரையும் தேவதை எதுவும் செய்யவில்லை. அப்படியானால், திருடியது யார் ?

ஊர் மக்களுக்கு வியப்பு! நீதி தேவதை, கோயிலைவிட்டு வெளியே வந்தபின், குற்றவாளியைத் தண்டிக்காமல் திரும்பிப் போகுமா ? அப்போது, எதிர்பாராத நிகழ்வு ஒன்று நடந்தது. கண்ணுக்குத் தெரியாத இரு கைகள் ஊர்த் தலைவரின் கழுத்தை நெரித்தன.

ஊர்த்தலைவர் சுருண்டு விழுந்து இறந்தார். அப்படியானால், ஊர்த்தலைவர்தான் திருடரா ? இதென்ன வியப்பு! ஆனாலும், எல்லார்க்கும் உள்ளுக்குள் மகிழ்ச்சி!

ஊர் மக்கள் நீதி தேவதையை நெருங்கி, "ஊர்த்தலைவரைக் கொன்றது ஏன் ?" என்று கேட்டனர்.

நீதிதேவதையின் குரல் உறுதியாய் எதிரொலித்தது:

"சிறிய உண்மையைப்பற்றி எனக்கு அக்கறையில்லை. உண்மைகளிலேயே பெரிய உண்மையைத்தான் நான் தேடுவேன். திருடர்களைவிடத் திருடத் தூண்டியவர்களையே நான் தண்டிப்பேன். ஊர் மக்கள் பட்டினி கிடக்கும்போது, மொத்த உணவுப் பொருள்களையும் குவித்து வைத்திருப்பவன்தானே பெரிய திருடன். ஆகவே, குற்றவாளியைத் தண்டித்தேன்."

"ஆமாம். அதுவும் சரிதான்..." என்றது மக்கள் கூட்டம்.

(நாட்டுப்புறக் கதை)

## இலக்கணமும் மொழித்திறனும்

### I. ஒவ்வோர் எழுத்துக்கும் ஒரு பணி

" யார் இதை உடைத்தது ?"

"இவன்"

– இந்த உரையாடல் நம் வீட்டுக்குள் அடிக்கடி நடக்கிறது.

அவன், அவள், அவர், இவன், இவள், இவர்,

அது, இது, அவை, இவை

என்ற சொற்கள், குறிப்பிட்ட மனிதரையோ பொருளையோ சுட்டிக்காட்ட உதவுகின்றன. இப்படிச் சுட்டிச்சொல்ல உதவும் எழுத்துகள் இரண்டு. அவை அ, இ.

இவற்றைச் சுட்டெழுத்துகள் என்கிறோம். பழங்காலத்தில் 'உ' என்பதும் சுட்டெழுத்துதான். 'உ' எழுத்து, பல பணிகளைச் செய்தது.

உதுக் காண் என்றால் சற்றுத் தூரத்தில் பார் என்று பொருள்.

உப்பக்கம் என்றால் முதுகுப் பக்கம் என்று பொருள்.

உம்பர் என்றால் மேலே என்று பொருள்.

இப்பொழுது, சுட்டிச்சொல்ல நாம் 'உ' எழுத்தைப் பயன்படுத்துவது இல்லை.

அவன், இவன், அது, இது என்று சுட்டுவது ஒருமுறை.

அப்பையன் இப்பெண் இவ்வீடு

என்றும் சுட்டுவோம். என்ன வேறுபாடு ? அவன், அவள், என்ற சுட்டுச் சொற்கள் ஆணா, பெண்ணா என்பதையும் சுட்டிச்சொல்லி விடுகின்றன.

அ, இ சுட்டெழுத்துகள் தனியே நின்று சுட்டும்போது, ஆண் பெண் அனைவரையும் பொதுவாகச் சுட்டுகின்றன.

இன்று அது, இது, அந்த, இந்த, அங்கு, இங்கு என்ற சுட்டுச் சொற்களே பெருவழக்காகி விட்டன.

அந்தப் பக்கம் இந்த வீடு

### பயிற்சி

வினாக்களுக்குச் சுட்டுச்சொற்கள் இட்டு விடை எழுதுக.

1. எது உன் வீடு ?

   ...................... என் வீடு.

2. யார் உன் அண்ணன்?

................................ என் அண்ணன்.

3. உன் பள்ளிக்கூடம் எங்குள்ளது?

என் பள்ளிக்கூடம் ................................ பக்கம் உள்ளது.

## II . எ. யா. ஆ. ஓ. ஏ

அவன் செய்தான்.

அவனா செய்தான்.

இரண்டு தொடர்களுக்கும் என்ன வேறுபாடு? முதல் தொடர்– ஒரு தகவல் மட்டுமே. இரண்டாவது தொடர் ஒரு வினாவை எழுப்புகிறது. தகவலை வினா ஆக்கிய எழுத்து எது?

ஆ

நாம் ஏராளமாய்க் கேள்விகளைக் கேட்க 'ஆ' உதவுகிறது.

நீயா? நானா?

இன்று பள்ளியா? விடுமுறையா?

கேள்வி எழுப்ப உதவும் வேறு சில எழுத்துகளும் உள்ளன. அவை:

எ, ஏ, யா, ஓ

- விடை என்ன?
- ஏன் வந்தாய்?
- யார் அங்கே?
- நீயோ செய்தாய்?

## III. ஏ – இன்னுமொரு பணி

'ஏ' எழுத்து, வினா கேட்க மட்டும் பயன்படுவது இல்லை.

அழுத்தம் கொடுத்துச் சொல்லவும் பயன்படுகிறது.

அவன் செய்தான்.

அவனே செய்தான்.

இரண்டாவது சொற்றொடரில் அழுத்தம் ஏற்படக் காரணமானது 'ஏ'.

சீதையே சிறந்தவள்.

உணவே மருந்து.

இப்பொழுது 'ஏ' க்குப் பதிலாகத் 'தான்' பயன்படுத்தும் வழக்கமும் இருக்கிறது.

அவன்தான் முதலில் வருவான்.

சீதைதான் சிறந்தவள்.

### IV. பயிற்சிகள் :

1. பின்வரும் வாக்கியங்களை வினா வாக்கியங்களாக மாற்றுக.

   அ) பாண்டியன் நல்லவன்.

   ஆ) அப்துல்லா வீட்டுக்கு வந்துவிட்டார்.

   இ) கடல் பெரியது.

2. பொருத்தமான வினாச்சொற்களை எழுதுக.

   அ) என் வினாவுக்கு விடை ........................... ?

   ஆ) சுற்றுலாவுக்குப் பெயர் கொடுத்திருப்பவர்கள் ..................... ?

   இ) உனக்குப் பிடித்த பண்டம்........................... ?

### V. அகராதி காணும் பயிற்சி

அகராதியைப் பார்த்து எழுத்துகளின் வரிசையை நாம் அறிதல்வேண்டும். 'அ' வில் தொடங்கும் தமிழ் உயிரெழுத்துகளின் வரிசை உங்களுக்குத் தெரியும் அல்லவா ? அப்படியானால், கீழ்க்காணும் சொற்களை வரிசைப்படுத்தி எழுதுங்கள்.

ஏழை, உலகம், ஔவை, அன்பு, எருது, ஆசை, ஓவியம், ஈட்டி, இளைஞன், ஒன்று, ஊக்கம், ஐம்பது.

| | |
|---|---|
| 1. அன்பு | 7. |
| 2. | 8. |
| 3. | 9. |
| 4. | 10. |
| 5. | 11. |
| 6. | 12. |

## வகுப்பறைத் திறன்கள்

### 1. பேசுக

தாராபாரதி கவிதையில் வரும் சொற்கள் இவை. இவற்றில் ஒன்று குறித்து உன் சொந்தக் கருத்தை ஐந்து மணித்துளி பேசுக.

1. சுயபலம் 2. தலைதூக்கு 3. திண்ணை
4. தெரு 5. சிகரம்

### 2. விவாதிக்க

அ. பார்வையற்றவரும் கால் இழந்தவரும் தேவதையிடம் சொன்னது உண்மையா? பொய்யா?

## 3. எழுதுக

### I. ஓரிரு சொற்களில் விடை எழுதுக

அ. ஔவையார் பாடலில் அவல் என்பதன் பொருள் என்ன ?

ஆ. ஔவையார் பாடல் இடம்பெற்ற நூலின் பெயர் என்ன ?

இ. மூன்று சுட்டெழுத்துகளில் இன்று நாம் பயன்படுத்தாத சுட்டெழுத்து எது ?

ஈ. சொல்லுக்கு அழுத்தம் தரும் உயிரெழுத்து எது ?

உ. அழைத்தால் நீதி தேவதை வரும் என்பது நம்பிக்கையா ? உண்மையா ?

ஊ. முத்துராமலிங்கத் தேவர் பிறந்த ஊர் எது ?

### II. ஓரிரு தொடர்களில் எழுதுக.

அ. எங்கு நிலம் நல்லதாக இருக்கும் ?

ஆ. பூமிப்பந்தின் விலை என்ன ?

இ. பெரிய திருடன் யார் ? ஏன் ?

ஈ. 'சமபந்தி' என்றால் என்ன ?

### III. நான்கு வரிகளுக்கு மிகாமல் குறிப்பு வரைக.

அ. ஔவையாரின் பாடல் கருத்து

ஆ. தாராபாரதி கவிதையில் உனக்குப் பிடித்த கருத்துகள்.

இ. குற்றப்பரம்பரைச் சட்டமும் முத்துராமலிங்கத் தேவரின் போராட்டமும்

## 4. எழுத்து விளையாட்டுகள்

அ. ஆசிரியர் ஓர் எழுத்தைச் சொல்லவேண்டும்.

(எ.கா) க என்று ஆசிரியர் சொன்னதும், மாணவர்கள் உடனே 'க'வில் தொடங்கும் சொல் ஒன்றைத் தங்கள் ஏட்டில் எழுத வேண்டும். (எ.கா) கப்பல்.

ஒரேசொல்லை இருவரோ இரண்டுக்கும் மேற்பட்டவரோ எழுதியிருந்தால், அவர்கள் விளையாட்டில் இருந்து வெளியேற வேண்டும். யாரும் எழுதாத சொல்லை எழுதியவர்கள் விளையாட்டில் தொடரலாம்.

அடுத்து, ஆசிரியர் வேறு ஓர் எழுத்தைச் சொல்ல வேண்டும். இறுதியில், வெற்றி பெறுபவரைக் கண்டு பிடிக்கலாம். எழுதும் சொற்கள் பெயர்ச்சொற்களாக இருக்க வேண்டும்.

(சிந்தித்துப் புதுப்புதுச் சொற்களை எழுதும் மாணவர்களை ஆசிரியர்கள் இவ்விளையாட்டில் அடையாளம் காணமுடியும்.)

ஆ. மாணவர்களைச் சிறு குழுக்களாகப் பிரிக்கவேண்டும். குழுக்களில் மூவருக்கு மேல் இருக்கக்கூடாது. குழுக்களுக்கு அ, த, ப என்பதுபோல் எழுத்தால் பெயரிடவேண்டும்.

ஆசிரியர் ஒரு குழுவின் எழுத்தைச் சொன்னதும் எடுத்துக்காட்டாக,

அ என்றதும் அந்தக் குழு உறுப்பினர்கள் தங்கள் குழுவின் எழுத்தில் தொடங்கும் சொற்களை விரைவாகச் சொல்லவேண்டும்.

நேரம் ஒரு நிமிடம் மட்டுமே.

( அ குழு என்றால் அன்பு, அழகு என்பதுபோல.... த குழு என்றால், தம்பி, தயிர் என்பது போல) அந்தக் குழு கூறிய சொற்கள் குறித்து வைக்கவேண்டும்.

இதேபோல் ஒவ்வொரு குழுவும் சொல்லவேண்டும். மூன்று சுற்றுகள்வரை விளையாட்டுத் தொடரவேண்டும்.

எந்தக் குழு அதிகமான சொற்களைக் கூறியதோ அந்தக் குழு வெற்றி பெற்ற குழு.

I. பெயர்ச் சொற்களைத்தான் கூறவேண்டும்.

II. கூறிய சொல்லை மீண்டும் கூறக்கூடாது.

III. அ குழு என்றால் அ வில் தொடங்கும் சொற்களை மட்டுமே சொல்லவேண்டும்.

அ குழு ஆசை என்றால் தவறு.

த குழு தாவரம் என்றால் தவறு.

## வாழ்க்கைத் திறன்கள்

தாராபாரதியின் கவிதையில் வெளிப்பட்ட கருத்து – ‘தன்னம்பிக்கை கொள்’ என்பது.

தன்னம்பிக்கை கொள்வதன் முதல்படி ‘தன்னை அறிவது’ ஆகும்.

உன்னை நீ அறிந்துள்ளாயா ?

### பயிற்சி 1
### எனக்குத் தெரியும்

உன் திறமைகளைப் பட்டியல் இடுக. (எ.கா: மிதிவண்டி ஓட்டத் தெரியும், அழகாக எழுதத் தெரியும்... என்பவை போல)

| | |
|---|---|
| 1. | 2. |
| 3. | 4. |
| 5. | 6. |
| 7. | 8. |
| 9. | 10. |

(உன்னிடம் உள்ள சிறுசிறு திறமைகளையும்  தவறாமல் குறிப்பிடவேண்டும். தேவையெனில், தனித்தாளைப் பயன்படுத்தவும்.)

### பயிற்சி 2

#### நான் விரும்புகிறேன்.

நீ கற்றுக்கொள்ள விரும்பும் திறன்களைப் பட்டியலிடுக.
(எ.கா: மேடைப்பேச்சு,  கணினி, நடிப்பு...)

1.
2.
3.
4.
5.
6.

### பயிற்சி 3

#### நான் திருந்த நினைக்கிறேன்

உன்னிடம் உள்ள குறைகளாக நீ கருதுவதைப் பட்டியலிடுக.
(எ.கா: சட்டெனக் கோபம் கொள்வது, அழுவது, ஆங்கிலம் பேசத்  தயங்குவது... என்பனபோல)

1.
2.
3.
4.
5.
6.

### பயிற்சி 4

#### நான் கனவு காண்கிறேன்.

உன் எதிர்காலக் கனவுகள் என்னென்ன ? பட்டியலிடுக.
(எ.கா: சென்னையில் வேலை பார்க்கவேண்டும், அம்மாவுக்கு நகைகள் செய்து தரவேண்டும், கார் வாங்க வேண்டும்...  என்பன போல)

1.
2.
3.
4.
5.

# திருக்குறள் *



## இனியவை கூறல்
(இனிமை பயக்கும் சொற்களைப் பேசுதல்)

1. இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

பொருள்: அன்பு கலந்து வஞ்சம் அற்றவையாகிய சொற்கள், மெய்ப்பொருள் கண்டவர்களின் வாய்ச்சொற்கள் இன்சொற்களாகும்.
ஈரம் – அன்பு ; அளைஇ – கலந்து; படிறு – வஞ்சம்; செம்பொருள் – சிறந்தபொருள்)

2. அகனமர்ந்து ஈதலின் நன்றே முகனமர்ந்து
இன்சொலன் ஆகப் பெறின்.

பொருள்: உள்ளம் விரும்பி ஒருவருக்குக்கொடுத்து உதவுவது நல்லது; முகம் மலர்ந்து ஒருவரைப் பார்த்து இனிய சொற்களைக் கூறுதல் அதைவிடவும் நல்லது.
(அகன் – அகம், உள்ளம்; அமர் – விருப்பம்; அமர்ந்து – விரும்பி; முகன் – முகம்; இன்சொல் – இனிய சொல்; இன்சொலன் – இனிய சொற்களைப் பேசுபவன்)

3. முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானாம்
இன்சொ லினதே அறம்

பொருள்: முகத்தால்விரும்பிஇனிமையுடன்நோக்கிஉள்ளம்கலந்தஇன்சொற்களைக்கூறும் தன்மையில் உள்ளதே அறமாகும்.
(அமர்ந்து – விரும்பி; அகத்தான்ஆம் – உள்ளம் கலந்து;இன்சொலினதே – இனிய சொற்களைப் பேசுதலே)

4. துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.

பொருள்: எல்லாரிடமும் இன்பம் தரும் இனிய சொற்களைப் பேசுவோரிடம், துன்பம் தரும் வறுமை அணுகாது.
(துன்புறூஉம் – துன்பம் தரும்; இன்புறூஉம் - இன்பம் தரும்; யார்மாட்டும் – யாரிடத்தும்; துவ்வாமை – வறுமை)

5. பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற.

பொருள்: பணிவுடையவனாகவும், இன்சொல் பேசுபவனாகவும் விளங்குவதே ஒருவனுக்கு உண்மையான அணிகலனாகும். உடல் அழகுக்காக அணியும் பிற எல்லாம் உண்மையான அணிகலன் ஆகா. (அணி – அழகுக்காக அணியும் நகைகள்; ஒருவற்கு – ஒருவனுக்கு)

6. அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.

பொருள்: பிறர்க்கு நன்மையானவற்றை நாடி இனிமை உடைய சொற்களைச் சொல்லின், பாவங்கள் தேய்ந்து குறைய, அறம் வளர்ந்து பெருகும். (அல்லவை – பாவம்; நாடி–விரும்பி)

7. நயன்ஈன்று நன்றி பயக்கும் பயன்ஈன்று
பண்பின் தலைப்பிரியாச் சொல்.

பொருள்: பிறர்க்கு நன்மையான பயனைத் தந்து நல்ல பண்பிலிருந்து நீங்காத சொற்கள், வழங்குவோனுக்கும் இன்பம் தந்து நன்மை பயக்கும். (நயன்ஈன்று – நல்ல பயன்களைத் தந்து; நன்றி–நன்மை; பயக்கும் – கொடுக்கும்; தலைப்பிரியாச் சொல் – நீங்காத சொற்கள்)

8. சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பந் தரும்.

பொருள்: பிறர்க்குத் துன்பம் விளைக்கும் சிறுமையிலிருந்து நீங்கிய இனிய சொற்கள் மறுமைக்கும் இம்மைக்கும் வழங்குவோனுக்கும் இன்பம் தரும். (சிறுமை–துன்பம்;மறுமை– மறுபிறவி;இன்மை–இப்பிறவி)

9. இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.

பொருள்: இனிய சொற்கள் இன்பம் உண்டாக்குவதைக் கண்டபின்னும், ஒருவன் கடுஞ்சொற்களைப் பேசுவது ஏனோ ?(இனிதீன்றல் – இனிது + ஈன்றல்; ஈன்றல் – தருதல்,உண்டாக்குதல்; வன்சொல் –கடுஞ்சொல்; எவன் கொலோ – என்ன காரணமோ ? ஏனோ ?)

10. இனிய உளவாக இன்னாத கூறல்
கனிஇருப்பக் காய்கவர்ந் தற்று.

பொருள்: இன்பம் தரும் இனிய சொற்கள் இருக்கும்போது, துன்பம் தரும் கடுஞ்சொற்களைப் பேசுவது, கனிகள் இருக்கும்போது காய்களை விரும்பி உண்பதைப் போன்றது. (கவர்தல் – நுகர்தல்; அற்று – அது போன்றது. முன்பு படித்தது நினைவில் இருக்கிறதா ? 'வன்பாற் கண் வற்றல் மரம் தளிர்த்து அற்று')

# செய்யும் தொழிலே தெய்வம்

செய்யும் தொழிலே தெய்வம் – அந்தத்
திறமைதான் நமது செல்வம்
கையும் காலுந்தான் உதவி கொண்ட
கடமைதான் நமக்குப் பதவி (செய்யும்...)

பயிரை வளர்த்தால் பலனாகும் – அது
உயிரைக்காக்கும் உணவாகும்
வெயிலே நமக்குத் துணையாகும் – இந்த
வேர்வைகள் எல்லாம் விதையாகும்
தினம் வேலையுண்டு குல மானமுண்டு
வருங்காலமுண்டு அதை நம்பிடுவோம் (செய்யும்...)

காயும் ஒரு நாள் கனியாகும் – நம்
கனவும் ஒருநாள் நனவாகும்
காயும் கனியும் விலையாகும் – நம்
கனவும் நினைவும் நிலையாகும் – உடல்
வாடினாலும் பசி மீறினாலும் – வழி
மாறிடாமலே வாழ்ந்திடுவோம் (செய்யும்...)

– பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்



ஆசிரியர் குறிப்பு:

மக்கள் கவிஞர் என்று அழைக்கப்படும் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம், எளிய தமிழில் அனைவருக்கும் புரியும்படி கவிதைகளை இயற்றியவர். திரையிசைப்பாடல்களையும் இயற்றியுள்ளார். உழைக்கும் மக்களின் துயரங்களையும் பொதுவுடைமைச் சிந்தனைகளையும் தமது பாடல்கள்வழிப் பரவலாக்கினார். பட்டுக்கோட்டை அருகே உள்ள செங்கப்படுத்தான்காடு என்னும் ஊரில் பிறந்தவர். இவர் வாழ்ந்த காலம் 13.4.1930முதல் 8.10.1959வரை.

# கல்லிலே கலைவண்ணம்



மேலே உள்ள படத்தைப் பாருங்கள். இது கல்லில் செதுக்கிய சிற்பம். உற்றுநோக்கினால், இந்தச் சிற்பத்தில் உள்ள அதிசயம் தெரியும்.

ம்ம்...தெரிகிறதா ? எங்கே சொல்லுங்கள் பார்ப்போம். இடப்பக்கத்திலிருந்து பார்த்தால் ஒரு காளையின் உருவம் தெரிகிறது. வலப்பக்கமாய்ப் பார்த்தால் யானையின் உருவம் தெரிகிறது.

சரியாகச் சொன்னீர்கள். எவ்வளவு அருமையாக இருக்கிறது ? கலைஞர்கள் இதுபோன்ற பல சிற்பங்களைச் செதுக்கியிருக்கிறார்கள்.

அது எங்கே இருக்கிறது என்றுதானே கேட்கிறீர்கள்! வாருங்கள்... சொல்கிறேன்.

காவிரி பாயும் சோழவளநாடு, கலைகளின் விளைநிலம். வியக்கவைக்கும் கட்டடக் கலையும், சிற்பக்கலையும் கொழிக்கும் ஊர் கும்பகோணம். இவ்வூரின் தென்புறம் அரிசிலாறு* பாய்கிறது. இதன் தென்கரையில் தாராசுரம் என்னும் ஊர் அமைந்துள்ளது. இங்கேதான் ஐராவதீசுவரர் கோயில் உள்ளது. இது சுமார் எண்ணூறு ஆண்டுகளுக்குமுன் இரண்டாம் இராசராச சோழனால் கட்டப்பட்டது.

நூறு கோயில்களுக்குச் சென்று அதன் சிற்பங்களின் பேரழகைப் பார்த்து மகிழ்ந்த அனுபவத்தை இந்த ஒரே கோயில் நமக்குத் தருகிறது. இவ்வளாகத்தில் எங்கும் சிற்பமயம். நம்மைச் சுண்டியிழுப்பவை இச்சிற்பங்கள். ஒவ்வொரு சிற்பத்திலும் ஒரு கதையோ காவியமோ பொதிந்திருக்கிறது. முப்புரம் எரித்தவன் (திரிபுராந்தகன்) கதை ஒரு சிற்பம்; யானையை வதம் செய்து, அதன் தோலைத் தன்மீது உடுத்திக்கொள்ளும் ஈசனின் யானை உரி போர்த்தவர் (கஜசம்ஹார மூர்த்தி) கதை இன்னொரு சிற்பம்; அடிமுடி தேடவைக்கும் அண்ணாமலையார் (லிங்கோத்பவர்) கதை மற்றொரு சிற்பம். இப்படிப் பல சிற்பங்கள் உள்ளன.

* இக்காலத்தில் அரசலாறு என வழங்கப்படுகிறது.

இராமாயண, மகாபாரதக் கதைகள், இரதி மன்மதன் கதைகள், சிவபுராணக் கதைகள் என எண்ணிலடங்காத கதைகள் நம்மை ஈர்க்கின்றன. அவற்றுடன் பரதநாட்டிய அடவுகளும் சிறப்பாகச் செதுக்கப்பட்டுள்ளன.



சங்கீதக் கருங்கற்படிகள்

அன்னம் பாலிக்கும் அற்புத அன்னபூரணி, இன்றைய கண்தானத்துக்கு அன்றே எடுத்துக் காட்டாக அமைந்த கண்ணப்பர், பறவை, விலங்கு, மனிதன் எனக் கலவையாய் அமைந்த ஒருடல் சிற்பங்கள் என, இக்கோயில் சிற்பங்கள் தமிழகச் சிற்பக்கலைச் சிறப்புக்கு ஒரு சோற்றுப்பதமாய் விளங்குகின்றன.

ஒவ்வொரு தூணின் நான்கு பட்டை களிலும் அமைந்த சிற்றோவியங்கள் அரிதும் அழகுமாய் ஆனவை. கோயிலின் நுழைவாயிலில் அமைந்த ஏழு கருங்கற் படிகள் 'சரிகமபதநி' எனும் ஏழு நாதப்படிகளாக வடிக்கப்பட்டுள்ளன. சோழ மண்டலத்துக்குள் நுழைந்தாலே, எங்கும் இசையொலி. 'தாம்தரிகிட தீம்தரிகிட' எனும் மத்தள லய ஒலி, வீணையின் மீட்டொலி, புல்லாங்குழலின் கான ஒலி, நாதசுர நல்லொலி... என இசைமழையில் நனையும் அனுபவம் நமக்குக் கிடைக்கிறது.

தாராசுரம் கோயிலின் கூம்பிய விமானத் தோற்றமும், அதற்குக் கீழே இருபுறமும் யானைகளும், குதிரைகளும் பூட்டிய இரதம்போல் அமைந்த மண்டபமும் வான்வெளி இரகசியத்தைக் காட்டுவதாகக் கார்ல்சேகன் (Carl Sagon) என்ற வானவியல் அறிஞர் கூறுவது குறிப்பிடத் தக்கதாகும்.



ஒருடல் சிற்பங்கள்

அதிபத்தர், அமர்நீதியார், இயற்பகையார், இசைஞானியார், எறிபத்தர், ஏனாதிநாயனார் முதலிய அறுபத்துமூன்று நாயன்மார்களின் கதைகளைக் கூறும் கல்வெட்டு எழுத்துத் தலைப்புகளுடன் கூடிய புடைப்புச் சிற்பங்கள் கண்ணுக்குப் பெருவிருந்தாக உள்ளன.

தஞ்சை அரண்மனைக்குச் சொந்தமானது இக்கோயில். அழகு வாய்ந்த இதன் பழைமையைத் தற்போது மத்தியத் தொல்பொருள் துறையினர் பாதுகாத்து வருகின்றனர். இதை மரபு அடையாளச் சின்னமாக யுனெஸ்கோ (UNESCO) அமைப்பு அறிவித்துள்ளது. ஒற்றைவரியில் இதைக் 'கலைகளின் சரணாலயம்' எனலாம்.

### செயல்பாடு :1

கோடைக்காலத்தில் குளமோ கண்மாயோ ஆறோ நீர்வற்றிய நிலையில் களிமண்ணெடுத்துப் பொம்மைகள் செய்யும் அனுபவம் சுவையானது. இந்த அனுபவம் உங்களுக்கு உண்டா ? மரப்பாச்சிப் பொம்மைகளின் இடத்தை இன்று நெகிழிப் (Plastic) பொம்மைகள் பிடித்துக்கொண்டன. அட்டைகள், நெட்டிகள் (தெர்மகூல்), தீப்பெட்டிகள், மரக்கட்டைகள், களிமண், பயன்பாடற்ற காகிதத்தில் தயாரிக்கப்பட்ட காகிதக்கூழ் இவற்றினால் அழகிய உருவங்கள் செய்து பார்க்கலாம்; கண்களுக்கு விருந்தளிக்கலாம்; படைப்பாக்கத்தை வளர்க்கலாம்.



### செயல்பாடு :2

பழங்காலச் சிற்பக்கலைகளைப்பற்றிக் களப்பயணம் சென்று அறிந்துகொள்ளும் ஆவல் உண்டா ? திருவாரூர், தஞ்சாவூர், கங்கைகொண்டசோழபுரம், தாராசுரம், மதுரை, திருவரங்கம், மாமல்லபுரம் போன்ற பல ஊர்களிலுள்ள அரண்மனைகள், வரலாற்று ஆய்வகங்கள், அருங்காட்சியகங்கள், தொல்பொருள்துறைக் காப்பாட்சியகங்கள் ஆகியவற்றைக் காணப் பயணம் மேற்கொள்ளலாம். இதேபோல் திருமயம், தரங்கம்பாடி, செஞ்சி, தீபங்குடி (சமணர்கோயில்) ஆகிய ஊர்களுக்கும், பௌத்தத்தலங்களுக்கும் பயணம் செய்யலாமே! கிறித்துவ, இசுலாமியக் கட்டடக்கலைகள் ஆகியன குறித்து அறியவும் பயணம் தொடரலாமே!

# சாதனைப் பெண்மணி மேரிகியூரி



மேரி கியூரி

கியூரி அம்மையார் போலந்து நாட்டில் 1867ஆம் ஆண்டு பிறந்தார். இவருடைய பெற்றோருக்கு மொத்தம் ஐந்து குழந்தைகள். இவரே அவர்களுள் இளையவர்.

இவரின் தந்தை ஓர் அறிவியல் ஆசிரியர். ஆனாலும் குடும்பத்தில் வறுமை. மூத்த சகோதரி மருத்துவக் கல்வி பயில விரும்பினார். ஆனால், போதிய வசதி இல்லை. இளையவள் மேரி, குழந்தைகளுக்குச் சிறப்புப் பாடம் சொல்லிக் கொடுத்தார்; தாதிபோல் பணிவிடைகள் செய்தார். அதன்மூலம் பொருளீட்டித் தம் தமக்கை கல்வி பயில உதவினார்.

மேரி அறிவியல் கல்வி கற்க விரும்பினார். ஆனால், பெண்ணுக்கு அறிவியல் கல்வி தேவை யில்லை. சமையல் கலையே போதும் எனக் கல்லூரி நிருவாகம் கூறியது. அதை ஏற்க மேரி மறுத்தார்.

மேரி, பிரான்சு தேசம் சென்று, கல்லூரியில் சேர்ந்தார் தம் வாழ்வின் இலட்சியமான அறிவியல் கல்வியைப் பயின்றார். தமது வறுமையை யாரும் அறியாவண்ணம் கல்லூரி நாள்களைக் கழித்தார். ஒருமுறை மூன்று நாள்கள் உணவு உட்கொள்ளாததால் மயக்கமடைந்து கீழே விழுந்தார். அவரைப் பரிசோதித்த மருத்துவர் நல்ல உணவும் ஓய்வும் தரவேண்டும் எனக் கூறியபோது, உடன் பயிலும் மாணவர்கள் அதிர்ச்சியடைந்து, பல வகையிலும் உதவினர்.

அறிவியல் மேதை பியூரிகியூரியை, மேரி திருமணம் செய்து கொண்டார். அவருடன் சேர்ந்து அறிவியல் ஆராய்ச்சியில் ஈடுபட்டார். மணவாழ்க்கையில் மனநிறைவுடன் ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்தார். ஆனால், ஒரு வாரம் மட்டுமே ஓய்வெடுத்துக்கொண்டு தமது அறிவியல் ஆராய்ச்சிப் பணிக்குத் திரும்பினார்.

தமது வருவாயில் பெரும்பகுதியை ஆராய்ச்சிக்குச் செலவிட்டதால், வீட்டுவேலைகளைக் கணவன் மனைவி இருவருமே பகிர்ந்து செய்தனர்; எளிமையாகவே வாழ்ந்தனர்.

இடைவிடாத ஆராய்ச்சியின் பயனாக, கணவன், மனைவி இருவரும் முதலில் பொலோனியம் என்னும் பொருளைக் கண்டுபிடித்தனர்.



அதன்பிறகு, இரண்டு ஆண்டுகள் இடைவிடாது ஆராய்ச்சி செய்து ரேடியம் என்னும் பொருளைக் கண்டுபிடித்தனர். இவ்விரண்டு அரிய கண்டுபிடிப்புகளுக்காக மேரி கியூரிக்கும் அவர் கணவரான பியூரி கியூரிக்கும் 1903ஆம் ஆண்டு நோபல் பரிசு வழங்கப் பட்டது.

ரேடியத்தின் உதவியால் மனித குலத்திற்குக் கேடு விளைவிக்கும் புற்றுநோய் மற்றும் பலவகைத் தோல் வியாதிகளைக் குணமாக்கலாம் எனக் கண்டறிந்தனர்.

அம்மையார், தமது உடல் நலத்தைப் பணயம் வைத்துக் கண்டுபிடித்த ரேடியத்தைத் தனியார் நிறுவனம் ஒன்று 50 இலட்சம் டாலர்களுக்கு விலைக்கு வாங்க முன் வந்தது. ஆனால், தமது கண்டுபிடிப்பை அறிவியல் உலகத்திற்குக் கொடையாக வழங்கினார் கியூரி.

அவருடைய கணவர் எதிர்பாராதவிதமாக விபத்தில் இறந்தபிறகு, பிரெஞ்சு அரசாங்கம் அம்மையாருக்கும், அவருடைய பெண் குழந்தைகள் இருவருக்கும் நிதியுதவி அளிக்க முன்வந்தது. ஆனாலும், மேரி அதனை ஏற்க மறுத்தார்.

அதன் பிறகு, அவருடைய கணவர் ஆற்றிய பேராசிரியர் பணி அவருக்கு அளிக்கப்பட்டது. அப்பணியை அவர் சிறப்பாகச் செய்தார். அவர் மேன்மேலும் ஆராய்ச்சிகள் பல செய்து ரேடியத்தின் அணு எடையைக் கண்டுபிடித்தார். அவருக்கு இரண்டாவது முறையாக 1911ஆம் ஆண்டு நோபல் பரிசு வழங்கப்பட்டது.

அதன் பிறகு, அவர் பல நாட்டினராலும் அழைக்கப்பட்டுப் பாராட்டப்பட்டார்; பல பட்டங்களையும் பரிசுகளையும் பெற்றார்.

செயற்கரிய செய்த கியூரி அம்மையார் 1934ஆம் ஆண்டு இயற்கை எய்தினார்.

கியூரி அம்மையாருக்குப்பின், அவர் மகள் ஐரினும் மருமகன் ஜோலியாட் கியூரியும் தொடர்ந்து அறிவியல் ஆராய்ச்சியில் ஈடுபட்டுச் செயற்கைக் கதிர்வீச்சுப் பற்றிய வேதியியல் ஆராய்ச்சிக்காக 1935 ஆம் ஆண்டு நோபல் பரிசினைப் பெற்றனர்.

ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் மூன்று நோபல் பரிசு பெற்ற இச்சாதனை இன்றுவரை முறியடிக்கப்படவில்லை.

### செயல்பாடு

பொலோனியம், ரேடியம், அணுஎடை, செயற்கைக் கதிர்வீச்சு போன்ற அறிவியல் தகவல்கள் குறித்து அறிவியல் ஆசிரியரிடம் கேட்டு அறிந்துகொள்க.

# இலக்கணமும் மொழித்திறனும்

## 1. செய்யுள் மொழி

எவன் கொலோ ?

திருக்குறளில் இடம்பெறும் இச்சொற்கள் தரும் பொருள் என்ன ?

என்ன பயன்கருதியோ ? என்பது பொருள். செய்யுளில் ஓசைக்காகவும், அழுத்தம் தருவதற் காகவும் பயன்படுத்தப்பட்டுள்ள சொல் – கொல்.

இது பெரும்பாலும் ஐயப்பொருளில் வரும்.

ஒரு பெண்ணைப் பார்த்து ' மான் கொல் ? மயில் கொல் ?' என்றால், இவள் மானோ மயிலோ என்று கூறுவதாகப் பொருள்.

இது செய்யுள் வழக்கு.

## 2. அளபெடை

உப்பு... உப்பு... என்று யாராவது உப்பு விற்கிறார்களா ?

உப்பூஉஉஉ.... என்று கூவுவார்கள். அல்லது உப்போஒஒஒஒ உப்பு என்பார்கள். இதேபோல் மாஅஅஅம்பழம் என்று கூவி விற்கிறார்கள். இவ்வாறு நீட்டியொலிப்பதை அளபெடை என்பர் இலக்கணத்தார்.

உப்பூஉஉஉ – என்பது உயிர் அளபெடை. ஏனென்றால், உ என்ற உயிர் எழுத்து நீண்டு ஒலித்தது.

பொய்ய்ய் – என்பது ஒற்றளபெடை. ஏனென்றால், ய் என்ற மெய் எழுத்து (ஒற்றெழுத்து) நீண்டு ஒலித்தது.

உங்கள் பேச்சில் இருந்து நீங்களும் சில எடுத்துக்காட்டுகள் தரலாமே!

## 3. பிழையும் திருத்தமும்

கீழே காணப்படுபவை பிழையான வாக்கியங்கள்.

அ. சிங்கம் வந்தான்

ஆ. இராமன் அழுதாள்

இ. பறவைகள் பாடியது

ஈ. அவன் வந்தேன்

ஏனெனில், இவ்வாக்கியங்களில் உள்ள வினைச்சொற்கள் பிழையானவை. எப்படி இருந்தால் சரியாக இருக்கும் ?

அ. வந்தது ஆ. அழுதான் இ. பாடின ஈ. வந்தான்

பிழைகள் நேராமல் இருக்க நாம் திணை, பால், எண், இடம்பற்றி அறிய வேண்டும்.

## 4. திணை

உயர்திணை, அஃறிணை எனத் திணை இருவகைப்படும்.

மனிதர் உயர்திணை ஆவர்.

மனிதர் அல்லாத உயிருள்ளவையும் உயிரற்றவையும் அஃறிணை ஆகும்.

பெயர்ச்சொற்களை உயர்திணைப் பெயர், அஃறிணைப் பெயர் எனப் பிரிக்கிறோம்.

வீரன், அம்மா, நடிகன், கண்ணகி – உயர்திணைப் பெயர்கள்.

பூ, மரம், பூனை, குருவி – அஃறிணைப் பெயர்கள்.

பயிற்சி :

கீழுள்ள பத்தியில் செவ்வண்ணமிடப்பட்ட சொற்களில் உயர்திணைப் பெயர்ச் சொற்களையும், அஃறிணைப் பெயர்ச்சொற்களையும் பிரித்து எழுதுக.

"அரசன் வேட்டையாடுவதற்குக் காடு சென்றான். அவனுடன்_வீரர்களும் சென்றனர்; பணியாள்கள் சிலரும் சென்றனர். காட்டில் மான்கள் ஓடின; மலைப்பாம்பு ஊர்ந்தது. திடீரென்று காற்று கடுமையாக வீசியது; மரங்கள் முரிந்தன. அதைப் பார்த்துக் குரங்குகள் அச்சம் கொண்டன; ஆந்தைகள் அலறின. அரண்மனையில் அரசி கவலையுடன் இருந்தாள். அமைச்சர், தளபதி ஆகியோரும் கவலையுடன் இருந்தனர்."

### 5. பால்

திணை என்பது பெரும் பிரிவு. அது உயர்திணை, அஃறிணை என இரண்டாகப் பிரிக்கப்பட்டது.

பால் என்பது மற்றொருவகைப் பிரிவு. பெயர்ச்சொற்களையும் வினைச் சொற்களையும் ஐந்து பால்களாகப் பிரிக்கிறோம்.

அவை:

ஆண்பால் – அவன், அண்ணன்

பெண்பால் – அவள், அரசி

பலர் பால் – அவர்கள், இளைஞர்கள்

ஒன்றன் பால் – அது, குதிரை

பலவின் பால் – அவை, மாடுகள்

ஆண்பால் பெயர்ச்சொல் ஆண்பால் வினை முடிவையே பெறும்.

அவன் வந்தான்

(பெயர்) (வினை)

அவன் வந்தாள் என்றோ,

அவன் வந்தார் என்றோ,

எழுதுவது பிழையாகும்.

இதேபோல்தான், பிற பால் சொற்களையும் எழுத வேண்டும்.

| பெயர் | வினை |
|---|---|
| அவள் | வந்தாள் |
| அவர்கள் | வந்தார்கள் |
| அது | வந்தது |
| அவை | வந்தன |

பயிற்சி

பின்வரும் உரைப்பகுதியில் உள்ள பிழைகளைச் சுட்டிக்காட்டிப் பிழை திருத்தி எழுதுக.

“தோட்டத்தில் பூக்கள் பூத்து இருந்தது. பறிப்பதற்குக் கமலா வந்தாள். கூடவே இராணியும் வேணியும் வந்தாள். அப்போது தோட்டத்தில் ஒரு பாம்பு ஓடின. கமலா கத்தினாள். இராணி மட்டும் பயமின்றிப் பாம்பை நெருங்கினார்கள்."

## 6. அகராதியைப் பார்ப்போம்

அகராதியில் உயிரெழுத்து பெறும் வரிசையை அறிந்தோம்.

உயிரெழுத்து வரிசை: அ ஆ இ ஈ உ ஊ

எ ஏ ஐ ஒ ஓ ஔ

இப்பொழுது மெய்யெழுத்து வரிசைபற்றி அறிவோம். முதலில் மெய் எழுத்துக்களை எழுதுவோம்.

மெய்யெழுத்து வரிசை: க் ங் ச் ஞ் ட் ண் த் ந் ப் ம் ய் ர் ல் வ் ழ் ள் ற் ன்

| வல்லினம் | மெல்லினம் | இடையினம் |
|---|---|---|
| க் | ங் | ய் |
| ச் | ஞ் | ர் |
| ட் | ண் | ல் |
| த் | ந் | வ் |
| ப் | ம் | ழ் |
| ற் | ன் | ள் |

பதினெட்டு மெய்யெழுத்துகளும் அகராதி வரிசையில் இவ்வாறு வந்துள்ளன.

வல்லெழுத்தைத் தொடர்ந்து அதன் இனமான மெல்லெழுத்து வருவது கவனிக்கத்தக்கது. அடுத்து, இடையின எழுத்துகள் வருகின்றன.

ற் ன் மட்டும் இறுதியில் வருகின்றன.

அப்படியானால், அகராதியில் அக்காள் என்னும் சொல் முதலில் வருமா ? அண்ணன் என்னும் சொல் முதலில் வருமா ? மெய்யெழுத்து வரிசையைப் பாருங்கள்.

அக்காள்தான் முதலில் வரும்.

அம்மா, அப்பா, அண்ணி, அங்காடி, அன்னம் என்னும் சொற்களை அகராதி வரிசையில் எழுதுவதானால், அங்காடி, அண்ணி, அப்பா, அம்மா, அன்னம் என்றுதான் எழுத வேண்டும்.

### பயிற்சி :

நீங்களும் முயலலாம்.

அகராதி வரிசையில் எழுதுக.

ஆமை, ஆசிரியர், ஆண்டு, ஆடு, ஆத்திரம், ஆயிரம், ஆவணி, ஆலை, ஆறு, ஆர்வம்.

## வகுப்பறைத் திறன்கள்

**1. பேசுக.**

பட்டுக்கோட்டையார் பாடலில் இடம்பெற்ற சொற்களை மையமாக வைத்து ஐந்து மணித்துளி பேசுக.

அ. வேர்வை  ஆ. வருங்காலம்  இ. சாமி  ஈ. பூமி

**2. வினா எழுப்புக.**

பின்வரும் பொருள்களை மையமாக வைத்து உனக்குத் தோன்றும் வினாக்களை எழுப்புக.

அ) பணிவு  ஆ) கடுஞ்சொல்  இ) கனவு  ஈ) கல்

**3. கலந்துரையாடுக.**

அ. இனிய சொல் பேசுவோரிடம் வறுமை அணுகாது – உண்மையா ?

ஆ. செய்யும் தொழிலே தெய்வம் – இந்தக் கொள்கை சரிதானா ?

**4.எழுதுக.**

**i. ஓரிரு சொற்களில் விடை எழுதுக.**

அ. எந்த ஆற்றின் தென்கரையில் தாராசுரம் உள்ளது ?

ஆ. ஐராவதீசுவரர் கோயிலைக் கட்டியவர் யார் ?

இ. கியூரி அம்மையார் எந்த நாட்டைச் சேர்ந்தவர் ?

ஈ. கியூரி அம்மையார், தன் கணவருடன் சேர்ந்து முதலில் கண்டுபிடித்த பொருளின் பெயர் என்ன ?

உ. கியூரி அம்மையார் குடும்பம் எத்தனை நோபல் பரிசுகளைப் பெற்றது ?

ஊ. துவ்வாமை என்ற சொல்லின் பொருள் யாது ?

எ. எப்போது அறம் பெருகும் ?

**ii. ஓரிரு தொடர்களில் விடை எழுதுக.**

அ. உள்ளம் விரும்பிக் கொடுப்பதைவிட எது சிறந்தது ?

ஆ. தாராசுரம் கோயிலின் விமானமும், மண்டபமும் எதைக் காட்டுவதாகக் ‘ கார்ல்சேகன்’ கூறுகிறார் ?

இ. ரேடியத்தின் உதவியால் மனிதகுலத்திற்குக் கிடைத்த பயன் என்ன ?

ஈ. ஒருவருக்கு உண்மையான அணிகலன்களாகத் திகழ்வன யாவை ?

**iii. நான்கு வரிகளுக்கு மிகாமல் எழுதுக.**

அ. கியூரி அம்மையாரின் சாதனை.

ஆ. ஏன் இன்சொல் பேச வேண்டும் ?

iv. பின்வரும் குறிப்புகளைக்கொண்டு ஒரு கட்டுரை வரைக.

தலைப்பு: உடல்நலம் காப்போம்

1. உடல் தூய்மைப் பழக்கங்கள்

அ. சாப்பிடுவதற்கு முன்னும் பின்னும் கை, வாய் கழுவுதல்.

ஆ. காலையும் இரவும் பல் துலக்குதல்

இ. நகம் வெட்டுதல்

ஈ. தினசரி குளித்தல்

உ. அழுக்கற்ற உடை உடுத்துதல்

2. உணவுப் பழக்கங்கள்

அ. பல்லைக் கெடுக்கும் பண்டங்களைத் தவிர்த்தல்.

ஆ. கீரை, காய்கறிகளை நாள்தோறும் உணவில் சேர்த்தல்.

இ. ஈ மொய்த்த, தூசி படிந்த பண்டங்கள் வாங்குவதைத் தவிர்த்தல்.

3. விளையாட்டு

அ. மாலையில் நாள்தோறும் விளையாடுதல்.

ஆ. நடத்தல், மிதிவண்டி ஓட்டுதல்.

இ. வெகுநேரம் தொடர்ந்து தொலைக்காட்சி பார்ப்பதைத் தவிர்த்தல்.

## வாழ்க்கைத் திறன்கள்

### 1. பேச்சுத் திறன் (இனியவை கூறல்)

வெற்றிக்கு அடிப்படையானது பேச்சுத்திறன். பேச்சுத்திறன் பல வழிகளில் வெளிப்படும். இனிமையாகப் பேசுவது ஒரு வழி. இனிய பேச்சு – நமக்கும் வெற்றி தரும்; பிறருக்கும் வெற்றி தரும்.

அ. பின்வரும் சொற்களில் பிறரை முகம் மலர வைக்கும் சொற்களைக் கண்டறிக.

- ஆகா
- நன்றி
- சகிக்கவில்லை
- அட, ச்சே!
- நன்று
- அருமை
- ஓ!
- சுமார்
- மோசம்

ஆ. நாற்காலிமீது ஏறிநின்று கீழே குதித்துக் காட்டும் சிறுவன், அப்பாவிடம் எதிர்பார்க்கும் பேச்சு எது ?

அ. டேய்! எச்சரிக்கை!

ஆ. அருமை அருமை!

இ. நாற்காலியை உடைத்துவிடாதே!

இ. அடுத்து எப்போது பார்க்கலாம் என்று உறவினர் கேட்கிறார். யார் பேசுவது இனிய பேச்சு ?

* பிழைச்சுக் கிடந்தா பாக்கலாம்!
* நம்ம நினைக்கிறது எங்கே நடக்குது ?
* கட்டாயம் சீக்கிரம் சந்திப்போம்.

ஈ இனிய பேச்சுக்கும் பாசாங்குப் பேச்சுக்கும் வேறுபாடு உண்டு. இனியது எது ?

பாசாங்கு எது ? கண்டறிக.

* உன் பேச்சு சிறப்பாக இருந்தது.
* உன்னைப்போலப் பேசுவதற்கு உலகத்தில் ஆளே இல்லை.
* போட்டியில் நீ வெற்றி பெறுவாய்.
* உன்னோடு போட்டி போட்டால் இமயமலையே தூள்தூள் ஆகும்.

உ. எழுதுக

இரண்டு ரூபாய்க்கு ஒரு பொருள் வாங்க வேண்டும். கடைக்காரரிடம் இருபது ரூபாய்த்தாளை நீட்டுகிறாய். கடைக்காரர் முகம் சுளித்துச் சில்லறை இல்லையா என்று கேட்கிறார். கடைக்காரரின் மனத்தை மாற்றும் இனிய பதில் எது ?

## 2. இரசித்தல்

சிற்பங்களைப் பார்த்து இரசித்தீர்களா ?

படைப்பது ஒரு கலை.

இரசிப்பது மற்றொரு கலை.

இரசிக்கத் தெரிந்தவர்கள் மகிழ்ச்சி உள்ளவர்களாக இருக்கிறார்கள். திரைப்படங்களை யும், திரைப்படப் பாடல்களையும் இரசிப்பவர்கள் பலர் இருக்கிறார்கள். ஆனால், அது மட்டுமா ? இசை, ஓவியம், சிற்பம் என்று இரசிப்பதற்குப் பல கலைகள் இருக்கின்றன. வானவில், விண்மீன், முழுமதி எனப் பல இயற்கைக் காட்சிகள் இருக்கின்றன.

அ. எத்தனைமுறை பார்த்தாலும் உனக்குச் சலிக்காத இயற்கைக்காட்சி எது ? அது பற்றி மூன்று வரிகள் எழுதுக.

ஆ. சின்னஞ்சிறு குன்றில் அல்லது மலையில் ஏறி விரிவான காட்சிகளைக் கண்ட அனுபவம் உண்டா ? இருந்தால், அது குறித்து மூன்று வரிகள் எழுதுக.

இ. நம் பாடப்பகுதியில் உள்ள சிற்பக்காட்சிகளில் உன்னைக் கவர்ந்த சிற்பக் காட்சி எது ? ஏன் ?

## தனிப்பாடல்*

கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான்
குடிக்கத்தான் கற்பித் தானா?
இல்லைத்தான் பொன்னைத்தான் எனக்குத்தான்
கொடுத்துத்தான் இரட்சித் தானா?
அல்லைத்தான் சொல்லித்தான் ஆரைத்தான்
நோவத்தான் ஐயோ எங்கும்
பல்லைத்தான் திறக்கத்தான் பதுமத்தான்
புவியில்தான் பண்ணி னானே. 1

வணக்கம்வரும் சிலநேரம் குமர கண்ட
வலிப்புவரும் சிலநேரம் வலியச் செய்யக்
கணக்குவரும் சிலநேரம் வேட்டை நாய்போல்
கடிக்கவரும் சிலநேரம் கயவர்க் கெல்லாம்
இணக்கவரும் படிதமிழைப் பாடிப் பாடி
எத்தனைநாள் திரிந்துதிரிந்து உழல்வேன் ஐயா!
குணக்கடலே அருட்கடலே அசுர ரான
குரைகடலை வென்றபரங் குன்று ளானே! 2

– இராமச்சந்திரக் கவிராயர்



### பாடல் 1 – பொருள் :

கல்லையும் மண்ணையும் காய்ச்சிக் குடிக்க இறைவன் சொல்லித் தரவில்லையே! பொன்பொருள் கொடுத்து என்னைக் காக்கவும் இல்லையே! இதற்காக யாரைக் குற்றம் சொல்லி என்னபயன் ? எங்கும், எல்லாரிடமும் பல்லைக்காட்டிப் பிழைக்குமாறு இறைவன் என்னைப் படைத்துவிட்டானே !

### சொற்பொருள்:

இரட்சித்தானா ? – காப்பாற்றினானா ?

அல்லைத்தான் – அதுவும் அல்லாமல்

ஆரைத்தான் – யாரைத்தான்

பதுமத்தான் – தாமரையில் உள்ள பிரமன்

புவி – உலகம்.

### பாடல் 2 – பொருள்:

பாட்டுப் பாடிப் பரிசு வாங்கப் பணம் படைத்தவர்களைப் பார்க்கப் போகும்போது சிலநேரம் அவர்கள் வணக்கம் சொல்லி வரவேற்கிறார்கள். சிலநேரம் என்னைக் கண்டதும் அவர்களுக்குக் குமரகண்ட வலிப்பு வருகிறது. முகத்தைத் திருப்பிக் கொள்கிறார்கள். சிலநேரம், என்னை ஏறிட்டும் பார்க்காமல் வேண்டுமென்றே கணக்குப் புத்தகத்தைப் புரட்டுகிறார்கள். சிலநேரம் நாய்களைப்போலக் கடிக்க வருகிறார்கள். இப்படிப்பட்ட கயவர்களிடம் தமிழைப் பாடிப்பாடிப் பரிசு வாங்க இன்னும் எத்தனை நாள் நான் திரிந்து அலைவேன் ? ஒலிக்கும் கடலாக இருந்த அரக்கர்களை வென்றவனே! திருப்பரங்குன்றத்தில் விளங்கும் முருகா! கூறு.

### சொற்பொருள்:

குமரகண்ட வலிப்பு – ஒருவகை வலிப்பு நோய்

இணக்கவரும்படி – அவர்கள் மனம் கனியும்படி

குணக்கடலே! அருட்கடலே! – முருகனை இவ்வாறு அழைக்கிறார்.

குரைகடல் – ஒலிக்கும் கடல்; அசுரர்கள் கடல் வடிவில் வந்தார்கள் என்பது கதை.

பரங்குன்றுளான் – திருப்பரங்குன்றத்தில் உள்ள முருகன்.

### நூல் குறிப்பு:

புலவர்கள் பலர், அவ்வப்போது பாடிய பல பாடல்கள் தொகுக்கப்படாமல் இருந்தன. அவற்றைத் 'தனிப்பாடல் திரட்டு' என்னும் பெயரில் தொகுத்துள்ளனர். பெரும்பாலான பாடல்கள் இருநூறுமுதல் முந்நூறு ஆண்டுகளுக்குள் பாடப்பட்டவை. பாடப்பகுதியில் இடம் பெற்றுள்ள பாடல்களைப் பாடியவர் இராமச்சந்திரக்கவிராயர்; துன்பத்தையும் நகைச்சுவையோடு சொல்வதில் வல்லவர் இவர்.

